# அறுபத்து நான்கு திருவிளையாடல்.

---

இந் நூல்

வ. சு. செங்கல்வராய பிள்ளை, எம். ஏ.

செய்து

சென்னை

மெமோரியல் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

May 1909

உ

கணபதி துணை.

திருத்தணிகேசன் துணை.

சிவமயம்.

# மதுரைச் சொக்கநாதர்

# அறுபத்து நான்கு திருவிளையாடல்.

---

இந் நூல்

வ. சு. செங்கல்வராய பிள்ளை, எம். ஏ.,

செய்து

சென்னை

மிமோரியல் அச்சுக்கூடத்திற்

பதிப்பித்தது.

April 1909.

சிவமயம்.

# முகவுரை.

பெரும் புலவர்கள் எடுத்துக் கையாள வேண்டிய இந்நூலைச் சிறியேன் இயற்றியது ஆசை காரணமாகவே யன்றி வேறு எக்காரணத்தாலு மன்று.

"புகழ்தரு மறைக்கு மேலோன் புடார்ச்சுன புரத்தின் சீர்மை, நிகழ்தர நிகழ்த்த வல்லை நீ கொலென் றெனது நெஞ்சே, யிகழ்தர வெழுந்த நாணு மிச்சையுந் தினம்போ ராடி, யகழ்தர நாணந் தோற்ற தாசையே வென்ற தம்மா."

என்னுந் திருக்குற்றாலப் புராண முடையார் செல்லின் உண்மை என் வரையும் மிகப்பொருத்தமாம். அறுபத்துநான்கு திருவிளையாடல்களையும் அறுபதநான்கு விதமாகப் பாடவேண்டும் என்னும் ஆசை ஒருபாலும், சிற்றறிவினனாகிய எளியனு இப்பெருங் காரியத்தை மேற்கொள்ளுதல் என்னும் நாணமும அச்சமும ஒருபாலுமாகத் தினம் போராட ஈற்றில் "ஆசையே வென்ற தம்மா"!; மேலும், "விசை

பரிமா வுளங்கிழித்த அம்பினிற் றீதோ

அரிமாப் பிழைப்பெய்த கோல்.?"

இந்நூலிலுள்ள பிழைகளைப் பொறுக்குமாறு கற்றுவல்ல பெரியோரை வணக்கமாய்க்கேட்டுக் கொள்ளுகின்றேன்.

சென்னை,
8-4-1909. } வ. சு. செங்கல்வராயன்.

திருத்தணிகேசன் துணை.

ஸ்ரீமீனாட்சி சுந்தரேசுரர் துணை.

---

# அறுபத்து நான்கு திருவிளையாடல்.

## காப்பு.

---

பொன்னுலகத் தார்வாழப் போரவுண ரைக்காய்ந்த
கொன்னுனைவேற் கோமான் குலவள்ளி நாயகியாம்
மங்கை புயந்தழுவ நன்குதவு முன்னோனை
நங் கை கொடுதொழுவோம் நாம்.

செருவிளை முப்புரஞ் செற்றவ னெந்தை
ருவிளை யாடலைச் செப்ப—கருவிளை
ழையடி வேரறுக்கும் பெம்மான்கைம் மாமுகத்தன்
வள்ழயடி யேற்கருளு மே.

---

## நூல்.

### 1. இந்திரன் பழிதீர்த்த திருவிளையாடல்.

ணைந்தளிர்த் தருவளர் பசும்பொ னாட்டினன்
வெந்திறல் விருத்திரன் வீயச் சூழ்பழி
சிந்திடப் போருஞ் செய்பு மாலவாய்
தரச் சோதியைத் தொழுதுய் வாமரோ,

## 2. வெள்ளையானையின் சாபந்தீர்த்த திருவிளையாடல்.

கள்ளாரு நறுமலரைக் காலின்கீழ்ப் படுத்தமையின்
பிள்ளாரு நெடுவனத்திற் றிரிகளிறுச் சமைந்தவொரு
வெள்ளானை வழிபடவும் வினைவிட்டி யருள்புரிந்த
வள்ளாலுன் மலரடியே மற்றடியேற் குறுதுணையாம்.

## 3. திருநகரங் கண்ட திருவிளையாடல்.

படம்பணி றலையிற் கொண்டுள்ள பன்ன கம்போ லறிவு
முயர், திடம்படுண்மைப் பத்தியுங்கொள் செழியன்
குலசேகரன் றன்னாற், கடம்பவனத்தைச்சீர்ப்படுத்திக்
கவினார் மதுரை நகர்வகுத்த, உடம்பி லொருகூ
றுமைக்களித்த ஒருத்தன் திருத்தாள் உளநினைப்பாம்.

## 4. தடாதகையார் அவதரித்த திருவிளையாடல்.

வித்தி யாவதி வேண்ட வவள்பொருட்
டத்த டாதகை யாய்வரு மும்முலைச்
சித்தி ரத்திரு சேர்தரு மாலவாய்
அத்த னும மறநின மேத்துவாம்.

## 5. மணஞ்செய்த திருவிளையாடல்.

அலை மறைத்துஞ் சடை மறைத்தும் பலிதேரும் பொருட்டாக அங்கை யேந்துந், தலை மறைத்தும் நதனுட்ட மரவணிக ளிவை மறைத்துந் தண்ணென் திங்கட், கலைமறைத்துங் கன்னிகைதன் விபரீத் முலை மறைத்துங் கட்குத் தோன்று; நிலைமறைத்துந் தென்னவனுயுலகாண்ட நின்மலனை நினைந்துவாழ்வாம்.

6. வெள்ளியம்பலத்துத் திருக்கூத்தாடிய திருவிளையாடல்.

திமிலை யாதி தூரி யங்க டிக்கெ லாமு ழங்கவே
அமித வின்பா முரக வேந்து முழுவை யண்ணலும்பெற
இமநிறைந்த மதிது ளங்க ரசித மன்று ளின்று நின்று
திமிதிமென் றுதிருநடஞ்செய்சிவனை நெஞ்சிருத்துவாம்.

7. குண்டோதரனுக்கு அன்னமிட்ட திருவிளையாடல்.

அன்னம்மொரு மலையத்தனை எஞ்சிற்றெனா மம்மை
முன்னம்மொரு குறுந்தாளனுண் முறுகும்பசி யேவி
இன்னும்பசி யென்றேயவன் யாவற்றையு முண்டும்
பின்னும்பசி கொள்ளும்படி செய்தோன்கழல் பேணாய்.

8. அன்னக்குழியும் வைகையு மழைத்த திருவிளையாடல்.

குண்டோ தரனுக் குறுவெம்பசி குன்ற அன்று
கண்டோர் வியக்கு முணக்கொள்குழி காட்டி நீர'
முண்டோ வெனவு நதிவையையை யூட்டு வித்த
எண்டோ ளிறைவ னடித்தாமரை யேத்தி வாழ்வாம்.

9. எழுகட லழைத்த திருவிளையாடல்.

கழிகட லிற்றோயக் காமுறு கின்றாளென்
னுழியமை யென்றேது முரைசெவி யிற்கேளா
செழுவிய தென்மதுரைத் திருநக ரத்தேயன்
றெழுகடல் வரவிட்ட இறைவனை யுளம்வைப்பாம்.

10. மலையத் துவசனை யழைத்த திருவிளையாடல்.

புன்க ணோனிந்தச் சுழியெழு எழுகடல் புடையே
என்க ணோயெங்ஙன் தோய்தலென் றுயக ரின்றி
வன்கணோனு மாமிமுன் மகிழ்ந்திட வானின்
தன்கணோயுறை மாமனைக் கொணர்ந்தவற் சார்வாம்.

## 11 உக்கிரபாண்டியன்திருவவதாரஞ்செய்ததிருவிளையாடல்

வெள்ளி வாய்வரு விமலை பானல
கேள்வி மிக்கவுக் கிரகு மாரன்முன்
றுள்ளி ளங்கிட நல்கு நாயகன்
தாள்வி ளங்கவென் றுழ்ந்த நெஞ்சினும்.

## 12. உக்கிர குமாரனுக்கு வேல், வளை, செண்டு கொடுத்த திருவிளையாடல்.

கலைஞருரை எண்ணுன்கி லக்கணங்கண் மேய
காதலனுக் கிணையழகி காந்திமதி யென்னு
நலநிறைந்த பெண்டிருவைத் திருமணஞ்செய் வித்து
நன்மகனுக் கரண்டருவான் வேல்வளைசெண் டுந்தும்
உலகுபுகழ்ந் தோதலுறுந் திருமுடியுஞ் சூட்டி
உமையாளோ டொரிலிங்கத் தேமறைந்த தேவைப்
பலவுயிர்க்கு முணவளிக்கும் பண்புநிறை மூலப்
பழம்பொருளை யுளத்திருத்திப் பழவினைக டீர்வாம்.

## 13. கடல் சுவற வேல் விட்ட திருவிளையாடல்.

மாறன் றிருநக ரெங்குங் குறையில தென்னுந் தகையுணர் வானோர் கோன், ஈறின் றுறநக ரெங்கும் பரவுதி யெனலுஞ் சலபதி ஏகாமுன், ஊறன் றறும் வகை குமரன் கனவினில் வந்துங் குறிசொலி ஒரு வேலால், காறன் னளவிகல் கடலுஞ் சுவறவி யற்றுங் கடவுளை மனம் வைப்பாம்.

## 14. இந்திரன் முடிமேல் வளையெறிந்த திருவிளையாடல்.

வான்மழை வேண்டி யம்பிடை வந்தும் வணங்க லில் லானிந்த வையகைக், கோன்மழை மறுக்க எனச் செயும் வானோர் கோமகன் மாற்றற நான்கு, வான் மழை தமமைச் சிறையிடு வித்து மற்றவன் பகுட மும் வளையாற், றுன்னிழ வியற்று வழுதியர்க் குற்ற தனித்துணை நாதரைச் சார்வாம்.

## 15. மேருவைச் செண்டாலடித்த திருவிளையாடல்.

தன்னாட் டினிற்பெய்ம் மழைசார் தவிலாத்
தகைகண் டுளநொந் திடுமன் மகிழ
முன்னாட் டருசெண் டதுகொண் டடரம்
முதுமே ருவைநன் கடிதந் திடுதி
உன்னாட் சியுமோங் குறுமா றதுபொன்
னுதவுங் கவலே லெனமுன் புதவும்
பொன்னாட் டியவண் ணமிலங் குறுநம்
புநிதன் கழனெஞ் சுபொலிந் திடுக.

## 16. வேதத்துக்குப் பொருளருளிச்செய்த திருவிளையாடல்.

ஓதி யுணர்த்துத லுன்கடமை
நாத வெனப்பணி ஞானியருக்
காதி மறைப்பொரு ளன்றருள்வோன்
பாத மலர்த்துணை பற்றுதுமே.

## 17. மாணிக்கம் விற்ற திருவிளையாடல்.

வேங்கையின்கோட் பட்டிறந்த வேந்தன் சேயின்
வியன்முடிக்கு வேண்டியநன் மணிகொ ணாந்து
ஆங்கவற்றி னிலக்கணத்தை யமைச்சர்க் கோதி
அடைவுடனிம் மணிகொண்டு முடிபு னைந்து

பாங்குபெறு மபிடேகத் தென்ன னென்னும்
பட்டமுடை னேயாள்க மற்றிம் மைந்தன்
றீங்கறுக ஒங்குகசல் லாயு ளென்ற
சிவவணிகர் திருத்தாணைஞ் சிருத்தி வாழ்வாம்.

## 18. வருணன் விட்ட கடலை வற்றச்செய்த திருவிளையாடல்

நீரின் கடவுள் சொலுமே வலினு னெடுநா டிடை வந்த, காரின் நிறமாங் கடலை முடிசேர் கார்நான் கைக் கொண்டே, பாரின் புறவன றகிலஞ் சுவறும் படி செய் தணி நிம்பத், தாரன் புகழ் பொங் கிடவன் றருள்செய் தலைவற் பரவுவாம்.

## 19. நான் மாடக் கூடலான திருவிளையாடல்.

நாடழிய நாடுகன நாணுறம றைத்தும்
ஈடழிபு னற்றலைவ னிட்டளமொ ழித்தும்
பீடுபெறு மாடல்புரி பிஞ்ஞுகனை யந்நான்
மாடமுறு கூடல்வரு மாமணியை வாழ்த்தாய்.

## 20. எல்லாம் வல்ல சித்தரான திருவிளையாடல்.

பலசித்தர் போற்ற நதிகங்கை யிந்து பணி கொன்றை தும்பை யறுகு, தலைசித்தின் மாற்றி வெண்பூதி யோடு தலைமாலை பூண்டு மதுரைத், தலை சித்த ராக எதிர்தோன்றி எண்ணில் தனியாடல் காட்டி யெல்லாம், வலசித்த ரென்ற புகழ்பெற்ற தேவை மகிழ்வுற்று நெஞ்சி னினைவாய்.

## 21. கல்லானைக்குக் கரும்பருத்திய திருவிளையாடல்.

சித்த இங்குள இக்கை நின்மொழி தேர்ந்தி ணங்கியிக் கல்லுவா, நத்தி யுண்டுக றிக்கு மேன்மது ரைத்த லத்துறை நாதனீ, அத்த னீயெமை யாண்ட ருள்செயு மண்ண னீயெனு மாறன்முன், வைத்த பைங்கழை கல்லுவாவுணவைத்த வன்புகழ்பாடுவாம்.

## 22. யானை யெய்த திருவிளையாடல்.

செம்பி யன்சொல்வழி யாக மியற்றித்
  தீய நெஞ்சமணர் கொல்களி றொன்றைத்
தும்பி நீமதுரை யூரைமன் றேடுந்
  தொலைத்தி யென்னவரு வெங்களிற் றைக்கண்
டெம்பி ரான்சிவபு ரந்தருள் கென்னு
  மேந்தல் வாழவும்விற் சேவக னாகி
அம்பில் வீறுநர சிங்கச ரந்தொட்
  டானை வாழ்த்துகநெஞ் சேயிரு போதும்.

## 23. விருத்த குமார பாலரான படலம்.

என்று நெஞ்சினிற் பார்ப்பதி மந்திர மியம்புநல் லொழுக்கத்தாள், அன்று நற்கதி யுறவொரு கிழவனு யடைந்துபின் அவள் நாணத், துன்று காளையி னுருக் கொடு தோன்றியுஞ் சுந்தரி பயந் தீர்க்க, மன்ற னுறிளங் குழவியாயினசிவன் மலரடிதொழுதுய்வாம்.

## 24. மாறி யாடின திருவிளையாடல்.

பலகலை தெரியிறை பரவிட மதுரையி
லலர்கதி ரரநதி அணிமுடி யிலகிட
வலமுள திருவடி மலரெழ இடமலர்
நிலமுற நடநடி நிமலனை நினைமினே.

## 25. பழியஞ்சின திருவிளையாடல்.

எம்மனை மாண்டா ளிவ்வன வேட னெறியம்பால்
செம்மை சிறந்த தென்னவ வென்று திகைத்தேங்கும்
அம்மறை யோனு மன்னனு மெய்ம்மை யதுகாணக்
கம்பிடை யோர்சொல் ஓதிய தேவைக் கருதுவாம்.

## 26. மா பாதகந் தீர்த்த திருவிளையாடல்.

ஈன்றா ளைப்புணர்ந் தீன்ற தந்தையை
ஊன்றா னற்றுக ஓங்கும் வாளினன்
தான்றா வில்கதி சார அன்பொடும்
என்றா னைப்பணிந் தின்ப மெய்துவாம்.

## 27. அங்கம் வெட்டின திருவிளையாடல்.

தாயுறழ் குருமனை யைச்சேரத் தகைமையி னினைவு கொ ளச்சோர, நாயுறழ் சித்தனென் னுமத்தோன் நல்லுடல்துணிபட வாள்வீசி, ஆயுதசாலைய னுசானுக் கருள்புரி யிறைவனை முக்கண்ணிற், றீயுறை நாதனை வந்தித்தே செம்மல ரடியிணை சிந்திப்பாம்.

## 28. நாக மெய்த திருவிளையாடல்.

வெஞ்சமண் வேடர் விடுத்திடு வெய்ய
நஞ்சுமிழ் நாக மடிந்திடு நாளில்
எஞ்சலில் நஞ்செழ இன்னமு தைக்கொண்
டஞ்சுதல் நீக்கிய அண்ணலை வாழ்த்தாய்.

## 29. மாயப் பசுவை வதைத்த திருவிளையாடல்.

சேற்றங்கொ ளமண்மூடர் எதிர்விட்ட ஆ கொண்ட சினைம்வீரியம், முற்றுங்க வர்ந்தும்பி னதுமாய வுஞ்சூழுமுனையேற்றினை, அற்றங்கு றித்தேவு நக்கன் பதந்தாழு மரிராமனுக், கிற்றங்கு வகைசொன்ன சொக்கன் திருத்தாளை யினிதேத்துவாம்.

## 30. மெய்க்காட்டிட்ட திருவிளையாடல்.

பாண்டிய னல்கிய நிதியமெல்லாமரன் பாதநெஞ்சிற், பூண்டிடு மன்பருக் கிட்டவன் சுந்தரப் புகழமைச்சன், வேண்டிய வண்ணமே சேனையின் காட்சியை விரைவினல்கி, ஆண்டருள் செய்விளை யாட்டினைப் பாட்டினி லமைத்துகப்பாம்.

## 31. உலவாக்கிழியருளிய திருவிளையாடல்.

இந்து முடிச்சடை சூடு நெடுந்தகை என்னக ரெங் கணுமே, உந்து முயிர்த்தொகை சிந்து மழைத்துளி ஒன்றுமிலாமையினுல், நொந்துள என்றரையன் சொல ஈசனு நுண்மறை யோர்பெருமை, முந்த வுரைத்துல வாக்கிழி யீந்தருள் மொய்ம்பதனைப்புகழ்வாம்.

## 32. வளையல் விற்ற திருவிளையாடல்.

வணிக ரில்வரு மாதர்த
மணிக ரங்களில் வளைபுனைந்
தணுகி னோர்மய லாற்பட
நணுகி னனரு ளுடுவாம்.

## 33. அட்டமாசித்தியுபதேசித்த திருவிளையாடல்.

பட்ட மங்கையிற் சாபவ யத்தினிற் பருங்கல்லா யிட்ட மங்கையர் சாபநீங் கிடமுன னினிதேத்த அட்ட சித்திக ளீந்தவர் நல்லுரு அடைந்துய்ய சட்டவாரருள் செயுமிறை தாட்டுணை தலைவைப்பாம்.

## 34. விடையிலச்சினையிட்ட திருவிளையாடல்.

அன்றுவளவ னொருவன் மதுரையண்ணலிலிங்கத்தை என்றுகாண்பே னென்னவேண்ட விரவில் வடவாயில் சென்றுகூட்டிக் கோலங்காட்டிச் செறியுங்கதவத்தில் நன்று விடையின் பொறியைநாட்டுநாத னடிபோற்றி.

## 35. தண்ணீர்ப்பந்தல் வைத்த திருவிளையாடல்.

கச்சி மன்னவ னோடுகலந்தன்று காளை யாமிளையோ னுங் கனன்றுபோர், நச்சி யேயெழு மீனவன் நக்கனே நற்றுணையென ஞாட்பிடைச் சேர்தலும், உச்சிவேளை யில் தாக முருத்திட ஒன்ன லார்நலிந் தோடவு நற்படைக், கச்ச நீங்கநீர்ப் பந்தரோன் றங்குவைத் தாக்கந் தந்தரு ளண்ணலைப் போற்றுவாம்.

## 36. இரசவாதஞ் செய்த திருவிளையாடல்.

பத்த ருவக்கநின் றமுதளிக்கும் பாவையப் பொன் னனை யாளிடத்திற், சித்தருருக்கொடுசென் றங்குள்ள செம்புவங் கம்மிவை ஏமமாகுஞ், சித்து புரிந்து மதிற்செய்ரூபம் தேசிற் பொலியவு மாடல் செய்து, முத்தனை யாளையங் காண்டருள்செய் முதல்வனை யன்புசெய் தின்புகொள்வாம்.

## 37. சோழனை மடுவில் விட்டிய திருவிளையாடல்.

மாறுத காதனி றைந்தே யோங்கு
மாறன் விளைக்களத் தய்யும் வண்ணம்
வீறுன சேவக ளுகத் தோன்றி
மேல்வந் தெதிர்த்தமர் செய்சோ ழற்கே
ஆறுத அச்சம்வி ளைத்துப் பின்னர்
ஆழ்நீர் மடுவி லழுந்தச் செய்த
ஏறுன வாகனத் தானை யேத்தி
இன்பக் கடறிளைத் தாடு வோமே.

## 38. உலவாக் கோட்டை யருளிய திருவிளையாடல்.

நிலவாக் கோடு மன்பர்க் கமுதம் நல்கும் புகழான், சலமாத் தோலைப் போர்த்தாய் தமியேற் குதவா யெனலும், இலமார்த் திடவே செழுவா லரிதந் தெடுக்குந் தோறும், உலவாக் கோட்டை யுதவும் பரமன் கழலுந் தொழுவாம்.

## 39. மாமனாக வந்து வழக்குரைத்த திருவிளையாடல்.

தன்மகவின் செல்வமெலாந் தாயத்தார்கைக்கொள்ளத்
தென்மதுரைத் தேவா சிறியேனைக் காத்தருளென்
றின்மதுரச் சொல்லா ளிரங்கலுநன் மாமனாய்த்
தன்மவழக் கேயுரைத்த சங்கரனார் தாள்போற்றி.

## 40. வரகுணனுக்குச் சிவலோகங் காட்டிய திருவிளையாடல்.

இரவின்க ணோர்ந்த ணன்மீது தன்னிவுளி ஏறப் பெரும்பவம் வர
ஏக்கங் கொளுந் தென்னன் வரகுண னுவக்கவே இடைமருதி லின்பு தந்தும்

அரவின்க ணாத்தொடையல் அணியுமெம தாதியே
அடியேன் பொருட்டு நீயிவ்
வவனிமிசை யன்பர்சேர் சிவலோக தரிசனம்
அளித்தியா லென்றிரங்கத்
தரவன்றி சைந்தங்கு தம்மன்ப ரோடுதாம் தங்குசிவ
லோக காட்சி
தந்துமன் னன்சிந்தை அன்புபொங் கச்செய்த
சங்கரன லால வாய்வாழ்
உரவன் கரத்திலகு மழுவன் புரத்தையெரி ஒருவன்
கடற்கடுவெழ
உண்டகரு ணாலயன் தொண்டர்மகிழ் நாதனென்
உள்ளத் தமர்ந்தொளிர்கவே.

## 41. விறகுவிற்ற திருவிளையாடல்.

கூடலில் வாழுறு வரகுணன் முன்னிலை குன்றாக் கீதம்
பலபாடும்
ஈடிலி ஏமநாதனை வெல்லுவ னென்றே செய்கூ
ணிறைவெற்றாய்
பாடலில் வல்லவ என்றுவ ணங்கிய பாணற் கான
விறகாளாய்
ஆடல்புரிந்திசை காட்டிசயந்தரு மத்தன் சித்தன்
கழல்போற்றி.

## 42. திருமுகங்கொடுத்த திருவிளையாடல்.

பத்திரனு வக்கநிதி
நத்தியரு ளென்னநிரு
பத்தையுதி யற்குவளர
உத்தமனை உள்குதியே.

## 43. பலகையிட்ட திருவிளையாடல்

ஓபாத வெம்மழைபெய் தெங்கும் பனிக்குமிருள் ஓங்குந் தினத்துமறவா. தயாசமின்றியிசை தேமாரி யென்னநனி யங்கே யளித்தருகினின், றோயாது சிந்தனைசெய் யும்பத்தி ரற்குமணி யோங்குந் திருப் பலகைதந்,தேயாத ரித்தசிவ னொண்டாமரைக்கழல்க ளென்றும் பணிந்து வருவாம்.

## 44. இசைவாது வென்ற திருவிளையாடல்.

பத்தி மிக்க பாடினி பண்செய் வென்றி கொண்டதும்
ஒத்தெதிர்ந்து வந்தவ ளொன்று தோல்வி யுற்றதும்
குத்தி ரஞ்செய் கோமகன் கோட்டம் விட்டுக் கூறிட
நித்த ஞர்செ யாடலை நித்த மேத்திப் பாடுவோம்.

## 45. பன்றிக் குட்டிக்கு முலைகொடுத்த திருவிளையாடல்.

கன்னிநன் ஞடஞேடுங் கலந்தேற்றமர் செய்து வீரர், துன்னுசு வர்க்கஞ் சார்ந்த துணைக் கேழலின் குட்டி களின், புன்னிலை யைக்கண்டங்கேபுணர் அன்புகொள் தாயிற் சென்று, நன்னர்நற் பாலைத் தந்து நல நல்கர னைத்து திப்பாம்.

## 46. பன்றிக் குட்டிகளை மந்திரிகளாக்கிய திருவிளையாடல்.

ஏனமுந் நான்கு மின்சொலு ணர்த்தும்
ஞானநி றைந்த நல்லமைச் சென்ன
மீனவ னுக்கு வேண்டிய ளித்த
வானவர் நாதன் வார்கழல் வாழ்த்தாய்.

## 47. கரிக்குருவிக்கு உபதேசஞ் செய்த திருவிளையாடல்.

காகங்களைக் கண்டுக லங்கியகார்
மேகந்திறப் புண்டிக வேண்டுதலும்
யோகங்கெழு மின்னுப தேசமிகல்
ஊகந்தரு முத்தம வைப்பணிவாம்.

## 48. நாரைக்கு முத்தி கொடுத்த திருவிளையாடல்.

கொல்லல் பாவநெறி கூடல்வ ழுத்தி
நல்ல தீர்த்தமுறல் நன்மைய தென்றே
ஒல்லை ஞானநெறி ஓர்ந்திடு நாரைக்
கல்லல் தீர்த்தருளும் அண்ணலை வாழ்த்தாய்.

## 49. திருவாலவாயான திருவிளையாடல்.

சேலவா வோடுதி ரைக்குழுந் நீரால்
திருவுள வுலகெலா மாயவுங் கூடற்
கோலவா யிற்றடங் கோயில்க ளெஞ்சக்
குலவிய பாண்டிய னெந்தையிவ் வூரின்
பாலவா மெல்லைக ளென்கையுங் காட்டாய்
பரிந்தெனக் கென்றலும் வாசுகி யைக்கொண்
டாலவா யென்றதி ருப்பெயர் கொள்ள
அணிநகர்க் கெல்லைவ குத்தவற் போற்றாய்.

## 50 சுந்தரப் பேரம்பெய்த திருவிளையாடல்.

செம்பிய னாதிய ஒன்னலர் சேர்ந்தமர் செய்யமு
னிந்தெதிர் சேர்தலுமே
சம்புநி னாருளே துணை யென்றுவ ணங்கிம
ளர்க்கழல் சார்வழுதி

நம்பவெ ழுந்துத ஞமம்வ ரைந்துள அம்புகள்கொண்
டிக னண்ணலர்கள்
உம்பர்வி னோறிட ஆடல்செய் சுந்தர நாதன்மலர்க்
கழல் உள்ளுதுமே

## 51. சங்கப் பலகை தந்த திருவிளையாடல்.

துங்கப்புலவர்கள் வேண்டத் தூய புலமை யளக்குஞ்,
சங்கப் பலகையொன் றீந்துஞ் சார்ந்தவர் தம்மொடு
மங்கண், தங்கித் தமிழ்வரு பாடற் றன்மை
பலபல ஆய்ந்தே, அங்கர்த்த மோதிய ஆதி அண்ணல்
பொலன்கழல் போற்றுய்.

## 52. தருமிக்குப் பொற்கிழி யளித்த திருவிளையாடல்.

பாண்டிய னிளைவுகண் டுரைப்போர் தாம்பெறவே
பட்டிமண் டபத்துவைத் தனனே ஆயிரம்பொன்
ஈண்டென தருமண நிறைவே றக்கவியொன்
றென்பொருட் டருளுதி யெனவேண் டுந்தருமி
வேண்டிய வணமவ னுடனே கொங்கெனுமோர்
மெய்ந்நிறை கவிசொலி வருவா தொன்றினையும்
தாண்டிய சினமுள புலவோன் கீரன்முனந்
தோன்றிமு னிகலுறு விடையோ னைப்பணிவாம்.

## 53. கீரனைக் கரை யேற்றிய திருவிளையாடல்.

சீர னைத்துமி ருந்தும் பொருட்பிழை சேருமென்
றோர் னர்த்தமங் கோதிநெற் றிக்கணி லோய்வுறப்
பார னைத்தும் புகழும்பொற் றாமரைப் பால்வீழுங்
கீர னைக்கரை யேற்றிய கீர்த்தி கிளத்துவாம்.

## 54. கீரனுக் கிலக்கண முபதேசித்த திருவிளையாடல்

நீத்த முந்துதி செய்து வணங்கு நியம முள்ளநக் கீர னுவகைகச், சத்தி யங்கயற் கண்ணியுரைத்த சான்ற சொலவழி தென்மொழிகற்ற, புத்தி மிக்க அகத்தியற் கொண்டு புகலி லக்கண மோதுவித் தாண்ட, ஆதி நாகமமைரக கசைத்தானைத் துதுதி யஞ்செய நிதநியமாமே.

## 55. சங்கத்தார் கலகந்தீர்த்த திருவிளையாடல்.

நிலநிறை கவிதொகை எனதுதா னேக்கிடி
னயமுள வெனபபகை மிகவெழு மவாக்கினர்
சலநிறை சடைச்சிவ னெமதுபோர் பார்த்தருள்
சமவுரை உரைத்தருள செயுமெனு வாழ்த்தலும்
கலைநிறை பொருட்கவி சொலவலார் கீரனுங்
கபிலனு மிசைதமிழ்ப் பரணனுங் காண்கவென்
றுலகுமு னறிந்திட வூமனுற் றேற்றுவித்
துதவிய பரஞ்சுட ரிலகுதாட் போற்றுதும்.

## 56. இடைக் காடன் பிணக்குத்தீர்த்த திருவிளையாடல்.

சங்க ராபொரு ணிறைந்த என்கவித்
தமிழி கழ்நதனன் மாறன் நெஞ்சுளேந்
திங்கு நீங்கியா னேகின் றேனெனு
மினசொல் சொல்லிடைக் காடன் பின்னர்சென்
றங்கு தக்கிலோ ரால யத்திருந்
தரையன் றன்பிழை பொறுக்க வேண்டமுன்
றங்கு தளிவரு சம்பு பூங்கழல்
தங்கி யொளிர்கஞ் சிநதைப் போதினில்.

## 57. வலை வீசின திருவிளையாடல்.

தானிட்ட சாபந் தன்னாற் றரணியிற் பரதர் யார்க்குங்
கோனிட்ட மகளாச் சேர்ந்தகுமரியை மணக்கவேண்டி
மீனிட்ட வலையில் வீழ வீசுகைத் திறத்தைக் காட்டுங்
கானிட்ட நட்ட மாடி கழைகழல் கருதி வாழ்வாம்.

## 58. வாதவூ ரடிகளுக் குபதேசித்த திருவிளையாடல்.

மாத்தாரா யெனமாறன் வழங்கும் பொருளைச் சிவ
நேசர்ப், பார்த்தாரு அன்பொடருள் பண்பன் வாத
வூரனையன், தீர்த்தாசா பாசமற இருந்து குருந்தி
னடியிலருள், ஆர்த்தாரான் பெருந்துறையான் ஐயன்
செய்ய கழல்போற்றி.

## 59. நரி பரியாக்கிய திருவிளையாடல்.

எங்கேவந் திலபரி என்றுவ ருத்தந்தங்
தங்கேதஞ் செழியனி ழைத்திட அன்பர்க்கா
வெங்கேழ்ந ரித்திர ளைப்பரி வேடந்தங் [றுய்.
திங்கேகொ ளென்றரு ளெண்குண னைப்போற்

## 60. பரி நரியாக்கிய திருவிளையாடல்.

வாத வூரனைமழ வாசி நரி யாயினமிகச்
சேத,மூறுவிளை வித்த சிறை செய்தவனையின்
றேத லூட்டுமினெ னச்சொலிறை யேங்க நதியின்
ஓத முற்றிடவு ரைத்தவொரு வற்ப ரவுவாம்.

## 61. மண் சுமந்த திருவிளையாடல்.

அன்பு மிக்கவடி யாள்பொ ருட்டுசிர மண்சுமக்கவு
மருந்தும் வாய்
முன்பு பிட்டமுத முண்ண வும்பணி பிழைக்க லால்
வெருளி முந்திறை
தன்பி ரம்படிச ராச ரங்கண்மிசைதாக்க வேமுதுகி
லேற்றுமங்
கின்பு தந்துமணி வாச கர்க்கருள்சு ரந்த எந்தைகழ
லேத்துவாம்.

## 62. பாண்டியன் சுரந்தீர்த்த திருவிளையாடல்.

திருநீ றணியான் வழுதிப் பெருமான் சேர்ந்தான்
அமணர் குழுவை
குருநீ காவாய் எனுமேந் திழையுள் குளிரக் கூடற்
கோமாற்
கருநோய் சுரங்கூ னீங்கச் சைவம் அவனோங் கிட
மென் கரத்தாற்
றிருநீ றிடுஞ்சேய் பாடன் மகிழ்ந்த சிவனார் கழலும்
புகழ்வாம்.

## 63. சமணரைக் கழுவேற்றிய திருவிளையாடல்.

பண்டத்தீ செஞ்சொற்சீர் பயின்றி லங்கு செந்தமிழ்ப்
பாவேவாதே நேரேறப் பணிசெய அமணர்களும்
கண்டித்தோ டஞ்சிப்போ கலம்ப ரந்த பைம்புனற்
காலோ ரேடே மேலேறக் கவிபிட வருதியென

எண்டிக்கோ ரும்பொற்பா எதிர்ந்து வந்த ணைங்கனி
யேபா ரீர்பா ரீந்தரென் றிசைநனி புகழவமண்
பிண்டத்தோர் வெங்கட்கூர் விளக்கழுங்க வென்கவி
பேசோர் சேயோ தோர்தேவைப் பிணியற
மொழிகுதுமே.

## 64. வன்னியுங் கிணறும் இலிங்கமு மழைத்த

## திருவிளையாடல்.

நின்னை யாரறி வார்நின் னிலைமை முணர்பவ ராரென், றென்னை யேசுமென் முன்வந் திடுமனை யிவ்வுழை காவாய், என்ன ஏந்திழைவேண்ட இவண் மணச் சான் றிவை யென்று, வன்னி கூவயி லிங்கம் வரவழைத் தான்கழல் வாழ்த்தாய்.

---

அத்தன் செய்விளை யாடல்கள் சாற்று
முத்தன் தாபதர் முன்வர வேகி
நத்துங் கூடலி னுதனை வாழ்த்திச்
சித்தந் தேர்முறை சிந்தனை செய்வாம்.

---

துன்பே யகற்றுதற்கன்பே வழியெனத் தோற்றுவிக்க
முன்பே யருளோ டறுபத்து நான்கு முடிவிலின்ப
அன்பே றருள்விளை யாட லியற்று மரன்கழலே
இன்பே றிதய கமலத்து நன்னி ரிருத்துகவே.



திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

# அநுபந்தம்.



இந்நூல் அச்சிலிருக்கும்போது எனக்கு ஓர் பெருந் துக்கம் சம்பவித்தது. தமிழ்ப்பாஷையில் அன்பும், சிவபிரானிடத்துப் பத்தியும், நன்னெறியும் கைப்பற்றுதல் வேண்டும் என்னும் புத்தியை எனக்குப் புகட்டினவரும், எனது அருமைத் தந்தையும் திருப்புகழ்ப் பதிப்பாசிரியரும், பத்து வருஷங்களுக்கு முன்பு மதுரையில் டிஸ்டிரிக்ட் முன்சீபா யிருந்தவரான மகா-ள-ள-ஸ்ரீ வ. த. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் நிகழும் 1909ஆம் ஏப்ரல்மீ 17௳, யாதொரு நோயினும் தந்தேகம் வருந்துதலின்றித் தமது 63-ஆ வயதிற் சிவபிரான் திருவடி நீழலைச் சேர்ந்தனர். அவர்கள் ஞாபகார்த்தமாகவே இந்நூல் இப்பூவுலகில் நிலவுமாறு நில வணி வேணியராம் ஸ்ரீ சோமசுந்தரப் பெருமான் திருவருள் புரிவாராக.

பாலாந் திருப்பு கழ்ப்பா வையச்சு பயில்வீர், எந்தை நிகரில், காலாந் தகற்க ணந் நெஞ்சு போதுங் கதிகாட்டு மென்ற குரிசில், மேலாந் தவத்தர் அவர் ஞாப கார்த்தம் வியன்மே தினிக்க ணிலகிந், நூலாந் தருக்க ணிறை சொக்க னக்க ணுதல்வீற் றிருந் தருளுமே.

வ. சு. செங்கல்வராயன்,

13-5-1909.